9th February 1959]

Sri K. SATTANATHA KARAYALAR : விளைவு பாதிக்கப்பட்ட இந்த வட்டாரத்திலுள்ள நிலங்களுக்கு கிஸ்தி ரெமிஷன் கொடுக்க ஏற்பாடு செய்வார்களா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : கிஸ்தி ரெமிஷனுக்கு இடம் இருந்தால் அதை ரெவின்யூ இலாகா கவனிக்கும்.

*Charcoal bags*

* 137 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

(அ) விறகு வண்டிகளுக்கு அனுமதிச்சீட்டு இருப்பதுபோல் கரி மூட்டைகளை ஏற்றிச் செல்ல அனுமதி உண்டா ?

(ஆ) இல்லை என்றால் ஏன் ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : (*a*) & (*b*) Under the existing rules, no permit is necessary for the transport of charcoal under the Timber Transit Rules worked by the Forest Department. A proposal to bring charcoal within the scope of the rules is separately under consideration. 9–30 a.m.

Sri V. K. KOTHANDARAMAN : ஸார், இப்பொழுது காடுகளை வைக்க வேண்டும் என்று சொல்லக்கூடிய நேரத்தில் விறகு வண்டிகள் போனால் மட்டும் அனுமதி வாங்கிக் கொண்டு போகவேண்டுமென்று சொல்லப்படுகிறது. ஆனால் கரியாக ஆக்கி எந்த விதமான அனுமதியும் இல்லாமல் நூற்றுக்கணக்கான டன்கள் கொண்டு போகும் நிலைமை இருப்பது சர்க்காருக்குத் தெரியுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : இது பற்றிக் கவனிக்கப்பட்டு வருகிறது என்று முன்பே சொன்னேன்.

*Pottery articles to the Industrial Exhibition*

* 138 *Q.*—Sri V. K. KOTHANDARAMAN : கனம் உள் விவகார அமைச்சர் அவர்கள் தயவுசெய்து பதிலளிப்பாரா—

வட ஆற்காடு ஜில்லா, குடியாத்தம் தாலூகா, கரிகேரியில் செய்யும் மண் பாண்டங்களை சர்வதேசக் கண்காட்சிக்கு அனுப்பப்பட்டது சர்க்காருக்குத் தெரியுமா ?

The Hon. Sri M. BHAKTAVATSALAM : No pottery articles produced at Karigiri were sent to any International Exhibition

Sri V. K. KOTHANDARAMAN : ஸார், வட ஆற்காடு ஜில்லாவில் இருக்கக்கூடிய Assistant Director of Fisheries அவர்களால் இந்த மண் பாண்டங்களை சர்வ தேசக் கண்காட்சிக்கு அனுப்பப்பட்டதா ? நேருஜி அவர்கள் கூட அதைப் பார்த்து பாராட்டியதாகச் சொல்லப்படுகிறது. பெருமை தரக்கூடிய இந்த மண் பாண்டங்களை மேலும் செய்ய அரசாங்கம் தனியாகப் பணம் ஒதுக்கி இதைத் தீவிரப் படுத்த முன் வருமா என்று அறிய விரும்பிகிறேன்.

The Hon. Sri M. BHAKTAVATSALAM : சமீபத்தில் இந்தியாவில் இத்தகைய ஒரு கண் காட்சி நடைபெற்றதாகத் தெரியவில்லை. இந்தத் தொழிலை அபிவிருத்தி செய்ய கவனம் செலுத்தப்பட்டு வருகிறது.